




உ
கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திர பரிபாலனம்


| தொகுதி உ. | விக்கிரம வரு புரட்டாதி மீ 1940 செப்டெம்பர் | பகுதி க |
| --- | --- | --- |


பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## மகேசுர வடிவம்

சிவபெருமானுக்குரிய வடிவங்கள் அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்றுமாம். சிவபெருமான் அருவத்திருமேனியுடையபொழுது சிவன் எனவும், அருவுருவத்திருமேனியுடையபொழுது சதாசிவன் எனவும், உருவத்திருமேனியுடையபொழுது மகேசுரன் எனவும் பெயர்பெறுவர். ஆன்மாக்களாகிய நம்போலிகளுடைய உருவம் இருவினைக்கு ஈடாகத் தோல் எலும்பு முதலிய தாதுக்களால் உண்டாகிய உருவம்; சிவபெருமானுடைய உருவம், ஆன்மாக்கள் செய்யும் தியானம் பூசை முதலியவைகளின் பொருட்டுச் சிவசத்தியாகிய திருவருட்குணங்கள் இன்னது இன்னது இன்ன இன்ன அவயவம் என்று பாவிக்கப்படும் உருவமாம்.

### சிவஞானசித்தியார்

உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றேன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே.

மகேசுர வடிவங்கள் சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, ஜலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், ஹரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கஜமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசினர், தக்ஷிணாமூர்த்தி, லிங்கோற்பவர் என்னும் இருபத்தைந்துமாம். இந்தப் பஞ்சவிம்சதி (இருபத்தைந்து) விக்கிரகபேதங்களைச் சிறிது வேறுபடுத்திக் கூறுவதுமுண்டு. அது ஆகமபேதமெனக் கொள்க.

சதாசிவமூர்த்தியினுடைய ஈசானமுகத்தில் சோமாஸ்கந்தர், சபாபதி, இடபாரூடர், சந்திரசேகரர், கல்யாணசுந்தரர் என்னும் மூர்த்திகள் தோன்றினர்.

தத்புருஷமுகத்தில் பிக்ஷாடனர், காமாரி, காலாரி, ஜலந்தராரி, திரிபுராரி என்னும் மூர்த்திகள் தோன்றினர்.

அகோரமுகத்தில் கஜாரி, வீரபத்திரர், தக்ஷிணாமூர்த்தி, கிராதர், நீலகண்டர் என்னும் மூர்த்திகள் தோன்றினர்.

வாமதேவமுகத்தில் கங்காளர், சக்கரதானர், கஜமுகானுக்கிரகர், சண்டேசானுக்கிரகர், ஏகபாதர் என்னும் மூர்த்திகள் தோன்றினர்.

சத்தியோஜாதமுகத்தில் லிங்கோற்பவர், சுகாசீனர், உமாமகேசுரர், ஆபதோத்தாரணர், க்ஷேத்திரபாலர் என்னும் மூர்த்திகள் தோன்றினர்.

𑌸𑍋𑌮𑌾𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌂 𑌨𑌟𑍇𑌶𑌞𑍍𑌚 𑌵𑍃𑌷𑌾𑌰𑍂𑌢𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚 ।
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍇𑌖𑌰𑌵𑍃𑌤𑌂 𑌵𑍈𑌵𑌾𑌹𑍍𑌯𑌂 𑌸𑍋𑌮𑍍𑌯𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌕𑌂 ॥
𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌟𑌨𑌞𑍍𑌚 𑌕𑌾𑌮𑌾𑌰𑌿𑌂 𑌕𑌾𑌲𑌨𑌾𑌶𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚 ।
𑌜𑌲𑌨𑍍𑌧𑍍𑌰𑌾𑌵𑌿 𑌸𑌂𑌹𑌾𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌰𑌾𑌰𑌿𑌞𑍍𑌚 𑌕𑌾𑌯𑍇𑌶 ।

𑌸𑍌𑌮𑍍𑌯𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌪𑌾𑌰𑍍𑌷𑌦𑌶𑍍𑌚 𑌵𑌿𑌜𑌾𑌯𑌤𑍇
𑌗𑌜𑌘𑍍𑌨𑌂 𑌵𑍀𑌰𑌭𑌦𑍍𑌰𑌂 𑌚 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌮𑍇𑌵 𑌚।

𑌕𑌿𑌰𑌾𑌤𑌵𑍇𑌷𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌷𑌪𑌾𑌨𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚।
𑌶𑌿𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑍇𑌣 𑌜𑌾𑌤𑍇𑌨 𑌬𑌹𑍁𑌭𑌿𑌃 𑌕𑌾𑌰𑌣𑍈𑌸𑍍𑌤𑌤𑌃।

𑌕𑌙𑍍𑌕𑌾𑌲𑌂 𑌚𑌕𑍍𑌰𑌦𑌾𑌨𑌂 𑌚 𑌵𑌿𑌘𑍍𑌨𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌮𑍇𑌵 𑌚।
𑌚𑌣𑍍𑌡𑍇𑌶𑍍𑌵𑌰𑍈𑌕𑌪𑌾𑌦𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌶𑍍𑌚 𑌜𑌾𑌯𑌤𑍇।

𑌲𑌿𑌙𑍍𑌗𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌸𑍁𑌖𑌾𑌸𑍀𑌨𑌂 𑌉𑌮𑌾𑌸𑌹𑌿𑌤𑌂 𑌤𑌥𑌾।
𑌹𑌰𑍍𑌯𑌰𑍍𑌧𑌨𑌾𑌰𑍀𑌸𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 [illegible]।

𑌸𑌦𑍍𑌯𑍋𑌜𑌾𑌤𑍇 𑌸𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌂𑌶𑌤𑌿 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍॥

## சிவபெருமான் சந்திரனைத் தரித்தமை

தக்கன் என்பவன் தனது புத்திரிகளாகிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் சந்திரனுக்கு விவாகஞ்செய்து கொடுத்தான். அவன் அவர்கள் எல்லாரையும் சமத்துவமாக அன்புபாராட்டாமல் கார்த்திகை, ரோகிணி என்னும் இரு மனைவியரிடத்து மாத்திரம் ஆர்வம் வைத்து அணுகுவானாயினான். தக்கன் தனது இருபத்தைந்து புத்திரிகள் காரணமாகச் சினந்து சந்திரனது கலைகள் யாவும் தேய்ந்து இலவாகுக என்று சாபங் கூறினான். இந்தச் சாபத்தினால் சந்திரனுடைய கலைகள் நாளுக்கொன்றாகக் குறைந்தன. பதினைந்து நாட்கள் கழிய ஒரு கலை மாத்திரம் இருந்தது. அதனால் அவன் மயங்கி, மெலிந்து, வெள்கி, இந்திரனோடு யோசித்துப் பிரமாவிடம் போய் அவரது உத்தரவின்படி "தொடருந் தொண்டரைத் துக்கந் தொடர்ந்து வந்—தடரும் போதா னருள் செய்பவரா"கிய சிவபெருமானை அடைந்து வணங்கி, உபநிடதங்களைச் சொல்லிப் போற்றினான்.

உயிர்கடோறுந் தாங்கிப் பழைய வினைகளை அறிந்து அவ் வினைகளை ஊட்டுபவராகிய சிவபெருமான் "சந்திரனே! நீ வந்த தென்னை?" என்று அறியாதார் போல வினவியருளினார். சந்திரன் தனக்குத் தக்கனுடைய சாபத்தால் அழிந்த கலைகள் வந்து கூடவும், எஞ்சிய இக் கலையொன்று தேயாமலிருக்கவும் அருள்

புரிக என்று பிரார்த்தித்தான். சிவபெருமான் "பயப்படாதே" என்று அருள்புரிந்து அழியாதிருந்த ஒரு கலையைத் திருக் கரத்தாலெடுத்துத் தமது திருச்சடையின்மீது சேர்த்தியருளி னர். தக்கன் சாபம் அவனைச் சார்ந்திலது.

சந்திரசேகரர் சந்திரனை நோக்கி, "நம்முடைய முடியில் அணிந்த சிறப்பினல் இந்தக் கலை அழிவின்றி யிருக்கும். அதனல் உன்னுடைய பழைய கலைகள் யாவும் பதினைந்து நாட்க ளில் நிரம்பிப் பின்பு அம் முறையாகத் தேய்ந்து வந்து ஒரு கலை மாத்திரம் தேயாதிருக்கும்; இவ்வாறே எக்காலமும் நிகழும்" என்றருளிச்செய்தார். சந்திரன் விடைபெற்றுக்கொண்டு தன் உலகை அடைந்தான். விட்டுணு முதலிய அனைவரும் சந்திர னுடைய இயற்கையை நோக்கித் தக்கனுலே சந்திரனுடைய கலைகள் யாவுந் தேய்வதும் மேல் வளர்வதுமாகிய இயற்கையுடை யனவாகச் சிவபெருமான் செய்தார். அவருடைய செயலை யார் தாம் அறிந்தவர் என்று புகழ்ந்தார்கள்.

கந்தபுராணம் தக்ஷகாண்டத்திலே கூறப்பட்ட இச் சரித்திரம்,

குறைவதாய குளிர்திங்கள் சூடிக் குனித்தான்வினை
பறைவ தாக்கும் பரமன் பகவன் பரந்தசடை
இறைவ னெங்கள் பெருமா னிடம்போ லிரும்பைதனுள்
மறைகள் வல்லார் வணங்கித் தொழுகின்ற மாகாளமே.

என்னும் திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரத்தாலும்,

போழொத்தவெண்மதியஞ் சூடிப்பொலிந்திலங்கு
வேழத்துரிபோர்த்தான் வெள்வளையாடான்வெருவ
வூழித்தியன்னானை யோங்கொலிமாப்பூண்டதோ
ராழித்தேர்வித்தகனை நான்கண்டதாரூரே.

என்னும் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தாலும்,

யாழைப்பழித்தன்னமொழி மங்கையொருபங்கன்
பேழைச்சடைமுடிமேற்பிறை வைத்தானிடம்பேணில்
தாழைப்பொழிலூடேசென்று பூழைத்தலைநுழைந்து
வாழைக்கனிகூழைக்குரங் குண்ணும்மறைக்காடே.

என்னும் சுந்தரமூர்த்திநாயனர் தேவாரத்தாலும் உணரப்படும்.

தக்கனல் இடர்பட்டு வந்த சந்திரனைச் சூடி அருள் செய்த மையால் சந்திரசேகரர் எனப்படுவர். "† அலைகடல் கடைய வன்றெழுந்த பாதிவெண்பிறை சடைவைத்த வெம்பரமர்" (திருஞானசம்பந்தர்) முக்கண்ணராய், மழுவும் மானும் தாங்கிய கரங்கள் இரண்டும், அபய வரத கரமிரண்டுமாகிய நான்கு திருக் கரங்களும் உடையராய், "புன்சடைமேல் வெண்டிங்கள் சூடி" (சுந்தரர்) யவராய்ச் சத்திசமேதராய் இருப்பர்.

தியானம்

கல்பவாத்யஹ்ருஷ்டம் ஸகலஶ்ருதிஸ்தம் ஸாரஹாவம்
விப்⁴ராஜத்³வத³னேந்த்³ரம் சந்த்³ரபி³ம்பா³ம்ஶுகலிதம் ।
ஈஜாத நாதஸகலாத்³யா நகம் விக்ரமாஹம்
ஹரிணவரஶர்வாணீம் வஹ்னிவிரோவஸிஷ்டம் ॥

சூரியன், சந்திரன், அக்கினியாகிய முச்சுடர்களையும் அதிட்டிப்பவர் என்பதையும், காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினீயம் என்னும் முத்தீ வேள்விக்கு அதிபர் என்பதையும், இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்திகளையுடையவர் என்பதையும் திரிநேத்திரங்கள் குறிக்கின்றன.

"சோம சூர்யாக்கினி நேத்திரமுடையர்" என்று சரபோபநிடதமும், "சுடர் மூன்றுங் கண் மூன்ருய்த் தொடர்ந்திலங்க" எனச் சிவதருமோத்தரமும்; "சுடர் மூன்றுங் கண் மூன்ருக் கொண்டான் காண்" என வாகீசர் தேவாரமும், "முக்கணனென்பது முத்தீ வேள்வியிற்—றெக்க தென்னிடை யென்பதோர் சுருக்கே" எனப் பதினெராந் திருமுறையும் "எல்லா மறியு மியல்பது நயனம்" எனச் சதாசிவரூபமும் கூறுகின்றன. சிவபெருமான் சந்திரனை அணிந்தது சர்வஞ்ஞத்துவர் தாம் என்பதையும், ஆன்மாக்களது பிறப்பிறப்புக்களை நீக்கி முத்தி கொடுப்பவர் தாம் என்பதையும் அறிவித்த உண்மையாகும்.

பட்டணத்தடிகள்

தூமதி சடைமிசைச் சூடுத றூநெறி
யாமதி யானென வமைத்த வாறே.

---

† சமுத்திரத்தைக் கடைந்தபோது குளிர்ந்த மிக்க பிரகாசமுடையவனுமாகிய சந்திரன் கிளர்ந்தான் என்று மகாபாரதம் கூறுவது ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

சோமதாரிமூர்த்தம், கேவலம், கௌரிசகிதம், ஆலிங்கனம் என மூன்று பேதமாம். கௌரிசகிதமாவது இடப்புறத்தில் தேவியாரோடு கூடியிருப்பது. ஆலிங்கனமாவது தேவி தேவர் இருவரும் திருக்கரத்தினல் தழுவியிருப்பது. கேவலம் முத்தியைக் கொடுக்கும். கௌரிசகிதம் புத்திமுத்தியைக் கொடுக்கும். ஆலிங்கனம் சர்வ காமத்தையும் கொடுக்கும்.

---

## சைவசாஸ்திர பரிபாலனத்தின் இரண்டாவதாண்டு

நமது பத்திரிகையின் முதல் ஆண்டு நிறைவுற்று இரண்டாவதாண்டு தொடங்கியிருக்கிறது. சென்ற ஆண்டிலே பல அரிய விஷயங்கள் வெளியாயின. அநேகர் அவைகளைப் படித்து மகிழ்ந்து தங்கடங்கள் அபிப்பிராயங்களை எழுதிவருகிறார்கள். இக் கலிகால வன்மையினல் சமயாபிமானம் குன்றிவருகிறது. வருணாச்சிரம தருமங்களை அநேகர் கைவிட்டனர். சைவசமயத்து மாறுன திருத்தங்களைச் செய்ய அனேகர் முற்பட்டுக் கொண்டனர். இவ்வகையான கெடுதிகள் ஒழியவும், பழைய வைதிக சைவம் பரந்தோங்கவும் வேதாகமங்களின் உண்மைகளை வெளியிட்டுவருகின்றோம்.

இந்த ஞானயாகத்தைச் செய்தற்குத் துணைசெய்து நிற்பவர்கள் யாழ்ப்பாணத்திலும், கொழும்பு முதலிய பாகங்களிலும், தென்னிந்தியாவிலும் உள்ள உபகாரிகள் பலராவர். முதல் வருடத்திற் போலவே இந்த இரண்டாம் வருடத்திலும் பரிபாலனம் நன்கு நடைபெற அருள்புரியுமாறு ஐந்துகரத்தெந்தையினது திருவடிக்கமலங்களை வணங்குகின்றோம்.

[குறிப்பு:—பத்திரக் கிரயத்தை இதுவரை அனுப்பாதவர்கள் உடனே அனுப்பிவைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். யாழ்: திருநெல்வேலிச் சிவன்கோயில் சிவஸ்ரீ ஆனந்தநடேசக் குருக்கள் 15 ரூபாவும், வண்ணை: சுதேசவைத்தியர் ஸ்ரீமத் மு. கதிரைவேற்பிள்ளை அவர்கள் 5 ரூபாவும் உபகரித்துள்ளார்கள். சுபம்.]

---

# ஆலய மந்திரங்கள்

[ஸ்ரீமான் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை அவர்கள் எழுதியது.]

தமிழ்நாட்டிற் பல சைவாலயங்கள் உள. அவற்றில் நித்திய நைமித்திகாதி விசேடங்கள் செவ்வனே நடைபெற்று வரும். அப்போதெல்லாம் அங்குப் பிரயோகிக்கப்பட்டுவருவன வடமொழிமந்திரங்கள். இக்காலைச் சில தமிழச்சைவர் கிளப்பியுள்ளார். தமிழ்நாட்டாலயங்களில் தமிழ்மந்திரங்களுடனேயே கிரியைகள் நடைபெறவேண்டும்; வடமொழித் தமிழர்க்குத் தெரியாது; அந்நியமொழியுமாகும்; ஆதலால், அம்மொழி மந்திரங்களை விலக்கவே வேண்டும் என்று அவர் பேசிவருகின்றனர். தேவார திருவாசகாதி தமிழ்மந்திரங்கள் பல கோயில்களில் ஓதப்படுவது இன்றும் பிரத்தியக்ஷம். அவை ஓதப்பெறாத கோயில்களில் அவற்றை ஓதுவித்தலும் அவசியமே. எந்தச் சைவனும் அதைத் தடைசெய்யமாட்டான். ஆனால், வடமொழி மந்திரங்களைத் தமிழ்நாட்டாலயங்களில் விலக்க வேண்டுமென்பதுதான் அர்த்தமற்ற பேச்சாயிருக்கிறது.

சைவாலயங்கள் தமிழ்நாட்டிற் போலத் தெலுங்க, மலையாள, கலிங்க, வங்க, காசுமீர, கோசல, மராட்டியமாதியெல்லா நாடுகளிலுமே யுண்டு. தமிழ்நாட்டில் தமிழ்ச்சைவர் இருத்தல் போல் தெலுங்க மலையாளமாதி அப் பிறநாடுகளிலுந் தெலுங்கச்சைவர் மலையாளச்சைவராதி பிறமொழிச்சைவரும் பலபேர் இருக்கத்தான்செய்கின்றனர். அவரெல்லாருஞ் சைவ சமயிகள்; ஆனால், வெவ்வேறு பாஷைக்குரியவர். தமிழச் சைவருக்குத் தமிழிற் பற்றிருப்பதுபோல அப் பிறமொழிச் சைவருக்குந் தத்தம் பாஷைகளிற் பற்றிருக்கும். ஆனால், தமிழச்சைவர் தமிழ்மந்திரத்துக் காசைப்படுவதைச் சைவாபிமானமென்பர். அது தமிழபிமானமேயாகும். அவராசை தெலுங்குநாட்டாலயங்களில் தெலுங்குமொழி மந்திரங்களையும் மலையாளநாட்டாலயங்களில் மலையாளமொழி மந்திரங்களையும் பிறநாட்டாலயங்களில் அவ்வந்நாட்டுமொழி மந்திரங்களையுமே கையாளவேண்டுமென்று அவ்வம் மொழிக்குரியாரையும் ஆசைப்படுமாறு தூண்டுவதாகும். பரதகண்டத்துள்ள அத்தனை சைவாலயங்களும் ஓரே மொழியால் ஒன்றோடொன்று

இணைக்கப்பட்டிருப்பது போய், அவ்வந் நாட்டு மொழிகளுடன் மாத்திரம் இணைக்கப்பட்டுவிடுமாயின் அகில பாரத வைதிக சைவ ஸத்ஜனர்களுக்கு அது எந்தவகையில் நயஞ்செய்யும்? அவ் விணைப்பால் சிதம்பரதரிசனத்துக்கு வருகிற வங்கச் சைவன் தமிழ் படித்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவன் அக் கோயிலில் நடைபெறுஞ் சிவஸ்தோத்திரங்களையுங் கிரியை முறைகளையும் அறியமாட்டாது அவ்வாலயத்தின்மாட்டுத் தனக்கிருக்கவேண்டிய பக்திசிரத்தையிற் குறைந்தவனாகித் தன் நாட்டிற்குத் திரும்புவான். அப்படியே தமிழச்சைவன் காசிதரிசனத்துக்குப் போனால் அக் கோயிலில் எம்மொழி மந்திரங்கள் நடக்குமோ அம்மொழியை அவன் படித்திருக்க வேண்டும். இன்றேல், அக் கோயிலினிடத்துப் பக்திசிரத்தை அவனுக்கு அற்றுப்போகும். இதுவே எல்லா மொழிக்காரரிடத்திலுமாம். இங்ஙனம் ஒரு மொழி நிலவுமிடத்துள்ள சைவாலயங்கள் மற்ற மொழிச் சைவருக்குப் பயன்படாமற்போகும்படி செய்வது புத்திசாலித்தனமாகாது. சைவசமயசமூகத்துக்கு இப் பெருநஷ்டத்தைக் கொண்டுவர முயலும் அத் தமிழச்சைவர் சற்றுக் கூர்ந்து யோசிப்பாராக.

சைவாலயங்களில் நடைபெறும் மந்திரங் கிரியைகள் பெரும் பகுதியாவது ஒன்றுபோலிருக்கவேண்டும். அதிகப்படியான வித்தியாசங்க ளிருக்குமானால் அவை சைவசமயத்தவருக்குள் ஒற்றுமைக்குறைவை யுண்டாக்கும். அவர் இம் மந்திரந் தகும்; இம் மந்திரந் தகாது; இக் கிரியை தகும்; இக் கிரியை தகாது என்று தம்முள் முரணிக் கூறிக் கலாய்த்தல் செய்வர். அஃதில்லாமலிருக்கவேண்டுமேயானால் அவையெல்லாம் ஒரே பாஷையில் எழுதப்பட்டிருப்பதுதான் பொருத்தம். பன்மொழிச் சைவருஞ் சந்தேகப்பட்டவிடங்களில் அவ்வொரு மொழிப் பயிற்சிகொண்டு தம்முட் கலந்தாராய்ந்து தெளிவு செய்துகொள்ளலாம்.

தமிழச்சைவர் வடமொழியைத் தமக்கு அயலான பாஷையென்கின்றனர். அஃதப்படியே யாகட்டும். சைவாலயங்களில் நடைபெறும் மந்திரங்களெல்லாஞ் சைவசம்பந்தமுடையனவல்லவா? சைவம் அவற்றிற் கலந்திருக்கிற அளவிற்காவது அவர் அவற்றை மதிக்கவேண்டாமா? அம் மந்திரபதங்கள்

வடமொழியேயாயினும் பொருள்கள் சைவமன்றோ? பதங்கள் தமிழல்லாமை கொண்டு அவற்றிலுள்ள சைவப் பொருள்களை இகழ்வது சைவசமயிக்குத் தகுமா? அவன் அசைவச் சக்கையே யாவன்.

பாரதகண்ட மெங்குமுள்ள சைவாலயங்களெல்லாமும் தமிழச்சைவர் தெலுங்கச்சைவர் முதலிய எல்லா மொழிச் சைவருக்கும் பொதுவாக இருக்கவேண்டும். அப் பொருட்டு ஒரு மொழிக்குரிய சைவர் பல பாஷைகளையும் படிக்கவேண்டுமென நிர்ப்பந்திக்கப்படுவது அக்கிரமம். அவரால் அப்படிப் படிக்கவு முடியாது. ஆனல், அச் சைவாலயங்களெல்லாம் ஒரே பாஷையில் மந்திரங்களை யுடையனவாய் அப் பலமொழிச் சைவருந் தத்தம் நாட்டு மொழிகளிற் பயிற்சியுடையராதல் போல, அவ்வொரு பாஷையிலும் பயிற்சியுடையராய்விடின் அவர் எந்த மொழிப் பிரதேசத்திலுமுள்ள ஆலயங்களுக்குஞ் செல்லலாம். வடமொழியொன்றுதான் அத் தகுதியில் நின்று எல்லாமொழிப் பிரதேச ஆலயங்களையுஞ் சேரப் பிணைத்து வைத்திருக்கிறது. அம் மொழியை மாத்திரம் அதிகப்படியாகப் படிப்பதற்குச் சோம்பலோ வெறுப்போ கொள்ளும் அத் தமிழச்சைவர் தெலுங்கு முதலிய நாடுகளிலுள்ள சைவாலய தரிசனத்தின் பொருட்டுத் தெலுங்கு முதலிய பல பாஷைகளை எப்படிப் படிப்பர்?

ஆனல், வடமொழிமந்திரங்களின் பொருள் தமிழச்சைவருக்கு விளங்கவில்லையே யென்பாரவர். எல்லாமொழிச்சைவருள்ளும் படித்தவரும் உண்டு; பாமரரும் உண்டு. அப்படியே தமிழச்சைவருள்ளும் பண்டிதசைவரும் பாமரசைவரும் உளரென்க. பண்டிதசைவராவார் வடமொழிப் பயிற்சியுடையராயே யிருப்பர். இது எல்லாமொழிச் சைவபண்டிதருக்கும் பொதுதருமம். சமயாபிமானமுள்ள தமிழச்சைவபண்டிதருள் சம்ஸ்கிருதபாஷாஞானசூனியரா யுள்ளவர் இவரென ஒருவரையாவது காட்ட முடியுமா? முடியாது. ஆகையால், பண்டிதசைவராயுள்ளவர் வடமொழிமந்திரங்களுக்குப் பொருள் தெரியவில்லையேயென மயங்கமாட்டாரென்க. ஆனற் பாமரசைவருக்கு அம் மந்திரார்த்தம் விளங்காதுதான். அதனைக் காரண

மாக வைத்துக்கொண்டு அகில பாரத வைதிக சைவாலயங்களை யும் இணைத்துக்கொண்டிருக்கிற இணைப்பைக் கத்தரிக்க முயல் வது தகாது. பாமரசைவரைப் பண்டிதசைவராக்குவதே உத்தமம். மேலும், அக் கத்தரிப்பு முயற்சியாற் பண்டித சைவர் நஷ்டமடைவரே தவிரப் பாமரசைவர் இலாபமடையப் போவதில்லை. அத் தமிழச்சைவரும் 'மறைமொழிதானே மந்திர மென்ப' என்ற சூத்திரத்தையே பாடிக்கொண்டு திரிவர். அதற்கு உரைகூறப் புகுந்தவரும் 'புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடர்' என்றார். ஆகவே, தமிழ்மந்திரங்களும் பலர்க்கு மறைக்கப்படவேண்டுவனவே. அவை தமிழர்க்கெல்லாம் பயனுமாறு யாங்ஙனம்? எல்லாத் தமிழர்க்குமே பயன்படும் விதத்தில் அம் மந்திரங்கள் வழங் கப்படுமாயின் அவை 'மறைமொழி', 'மறைத்துச் சொல் லுஞ் சொற்றொடர்' என்ற இலக்கணங்களை யிழந்து, மந்திரங்க ளாகாவா பொழியும். ஆகவே, தமிழ்மந்திரங்களே வேண்டு மென்னுந் தமிழச்சைவர் அதனால் தாம் விரும்பிய கருத்து நிரம்பாமையை யறிந்தடங்குவாராக.

அத் தமிழச்சைவர் இன்னொரு சங்கதியுஞ் சொல்வதுண்டு. ஆரியவேதமந்திரங்களைச் சூத்திரர் கேட்பாராயின் அவர் காதில் ஈயத்தைக் காய்ச்சி யூற்றவேண்டுமென்று மனுஸ்மிருதி சொல்கின்றமையானும், தமிழரைச் சூத்திரவகுப்பில் ஆரியர் சேர்த்துப் படிக்கின்றமையானும் தமிழ்நாட்டாலயங்களுக்கு அந்த வடமொழிமந்திரங்கள் வேண்டா மென்பதே அச் சங் கதி. இது ஒரு மடத்தனமான விவகாரம். வடமொழி வேதங்களுக்கும் ஆரியரென்று சொல்லப்படுபவர்களுக்கும் விசேட சம்பந்தம் என்ன வுண்டு? ஆரியரென்பவர் தமிழச் சைவரைப் பார்த்து 'நீர் சூத்திரர். உமக்கு வேதத்தைக் கற்கக் கேட்க அதிகாரமில்லை' யென்று பேசுவாரேயாமாயின் அச் சைவர் அறிவாண்மையுடையராயின் அவ்வாரியர் கன்னத்தில் ஓங்கி யறையலாம். அது குற்றமாகாது. ஆனால், அறையலாம் என்பதற்கு அப்படியே பொருள் கொள்ளற்க. தமிழச்சைவர் ஆரியரென்று சொல்வது பிராமணரையேயாம். தமிழ்நாட் டளவில் அந்தப் பிராமணரை ஆராய்ச்சிக் கெடுத்துக்கொள்க. அவருள் எத்தனைபேர் சைவசமயத்தவர்? ஒரு பகுதியினர்

கொழுத்த மாயாவாதியர். இன்னொரு பகுதியினர் பழுத்த வைஷ்ணவர். பின்னொரு பகுதியினர் முழுத்த மாத்துவர். அத்தனைபேரும் அசைவர். அவர் மதங்களனைத்தும் வைதிகப் புறம், அவைதிகம். சைவசமயத்தவர் அவருள் ஆயிரவருக்கொருவர் அகப்படுவதும் அருமை. அந்த இருக்காதி நான்கு வேதங்களுமோ சைவசமயத்தையே பற்றிப் பேசுவன. அச் சைவநூலை அவ் வசைவக்கூட்டம் தன்னதென்று எப்படி உரிமை கொண்டாடலாம்? ஆகையால் தமிழச்சைவர் அவ்வாரியரைப் பார்த்துப் "பிராமணரே! நீவிர் அசைவர், அவைதிக சமயத்தார். வைதிக சைவசமயப் பிரமாண நூலாகிய வேதத்தைத் தொடத்தானும் உங்களுக்கு அதிகாரங் கிடையாது. சைவசமய ஆசாரணையில்லாத உங்கள் சென்மத்தைத் தீயிட்டுக் கொளுத்தவேண்டும் ('திக் ஜன்ம மசிவார்ச்சகம்' ப்ருஹஜ் ஜாபாலோபநிஷத்து)" என்று திருப்பி விவகரித்தால் அது அவர் கன்னத்தில் அறைந்ததுபோலாகாதா? தமிழச்சைவர் தாம் சூத்திரரென்பதை ஒப்புக்கொண்டே பேசினும் விவகாரங் கெட்டுப்போகாது. அவர் சாதியாற் சூத்திரராயினுஞ் சமயத்தாற் சைவர். பிராமணர் சாதியாற் பிராமணராயினுஞ் சமயத்தால் அசைவர். சூத்திரசாதியாரைக் காட்டிலும் அசைவசமயிகள் பெருமைக்குரியரோ? இவ் வழக்கில் என்ன தப்பிருக்கிறது? ஆகவே, ஆரியர் தமிழச்சைவரை நிந்திக்கிறார் என்று சொல்லிக்கொண்டு அதற்காக வடமொழிவேதத்தைத் தமிழச்சைவர் வேண்டாமெனல் நியாயமாகா தென்க.

ஆனால், மனுஸ்மிருதியில் மேற்காட்டப்பட்டபடி வாக்கியமிருக்குமேயானால் பிரபஞ்சத்தில் ஸத்துக்கள்பாற் காணப்படும் ஸதாசாரத்துக்கு நேர்மாறாக அஃதிருப்பதால் அதனை இடைச்செருகலென்றோ வேறு பொருளுடையதென்றோதான் கொள்ளவேண்டும். அவ்வாசாரமாவதிது. தமிழ்நாட்டுச் சைவாலயங்களில் பூசாகாலங்களில் வடமொழி வேதமந்திரங்கள் உரத்த குரலில் ஓதப்பட்டு ஆரியரல்லாதா ரெல்லார் காதுகளிலும் விழுகின்றன. ஆரியரல்லாதார் சிலர் வீட்டில் விவாஹாதி காரியங்களைப் புரோகிதரா யிருந்து நடத்திவைப்பவர் பிராமணரே. அவர் அக் காரியங்களில் வடமொழி மந்திரங்க

ளோடிபைக்த கிரியைகளையே செய்துவருகின்றனர். அவ் வீட்டுத் தமிழரும் அவ் விசேடங்களுக்கு விஜயஞ்செய்துள்ள பலவகைப் பிற தமிழரும் அம் மந்திரங்களைக் காதுகொடுத்துக் கேட்பதுண்டு. உத்ஸவ காலங்களில் மூர்த்திகள் வீதிவலம் வரும்போது பிராமணர் ஒருவரோடொருவர் கைகோத்து வரிசைவரிசையாக நின்று வடமொழிவேத நான்கின் மந்திரங்களையும் உரக்கப் பாராயணஞ் செய்துகொண்டு வரும் வழக்கம் இந் நாட்டிற் பல்லாயிர வருடங்களாக நடந்துவருகின்றது. சக்கிலி சண்டாளருங் கூட அப் பாராயணத்தைக் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டுதான் வருகின்றனர். அப் பாராயணாதி சமயங்களில் ஈயத்தைக் காய்ச்சி எங்கே யூற்றுவது? அச் சக்கிலி சண்டாளராதியோர் காதுகளிலா? அவர் காதுகேட்க அம் மந்திரங்களை ஓதும் அப் பார்ப்பனர் வாய்களிலா? ஆகையினால் அவ் வேதமந்திரங்களைத் தமிழச்சைவராதியோர் ஆராய்தல் கூடாது, கேட்டல் கூடாது என்பனவாதிய தடைகள் எந்தக் காலத்திலும் இருந்தது கிடையாதென்க. பார்ப்பனர் அத் தடைகளைப் புகுத்தினரென்பதும் வீண் தூஷணையேயாம். தமிழ்நாட்டுச் சைவாலயங்களில் வடமொழி வேதமந்திரங்கள் வேண்டாமென்று சில தமிழச்சைவர் சொல்வது அவர்க்கடாதென்பதை இவ் விவகாரங்களாற் காண்க.

---

## ஓர் வினா

சுந்தரமூர்த்திநாயனார் திருநக்ஷத்திரமாகிய ஆடிச்சுவாதி உற்சவத்தில் ஈஸ்வரன் தடுத்தாட்கொள்ள எந்த மூர்த்தி புறப்பாடு செய்யலாம்? பெரியபுராணம் தடுத்தாட்கொண்டபுராணத்தில் ஈஸ்வரன் தடுத்தாட்கொண்டதாக இருக்கிறது. அதற்காக ஒரு மூர்த்தி பிரதிஷ்டை செய்வதா? அல்லது பிக்ஷாடனர் புறப்பாடு செய்து தடுத்தாட்கொண்ட ஐதிகம் நடத்தலாமா? அதனாற் குற்றமுண்டா? இது விபரத்தை ஆகமசாஸ்திர அறிஞர்கள் விடை தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஓர் சந்தேகி

---

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தியானம்

[மு. ஞானப்பிரகாசம் B. SC., ஆசிரியர், பரமேஸ்வரக்கல்லூரி]

சைவமக்களாகிய நாங்கள் சைவத்திருநெறிப் பெருந்தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளது சரித்திரத்தைப் பற்பல இடங்களிலும் கேட்டிருக்கின்றோம். எங்களுட் பெரும்பான்மையோர் கேட்டவற்றை அப்படியே மறந்துவிடுகிறோம். அதனால் பயனொன்றுமில்லை. கேட்டவற்றை மறந்துவிடுதல் பாவச்செயலாகும் என்பதை உன்னித் திருப்பித் திருப்பிக் கேட்டவற்றைச் சிந்தையிலிருத்தி, அந்தச் சிந்தையிலே படிந்துள்ள அழுக்கையும் திருக்கையும் போக்க முயலுபவர்கள் அருமை பெருமையாய் எங்களுக்குள் ஒருவர், இருவர் இருக்கிறார்கள். அவர்களே கேட்டதைச் சிந்தித்துப் பெரும் பயனடையும் பெருமறிவினராவர். அவர்களே தெளிவான ஞானத்தைப் பெறுவதற்கு யோக்கியருமாவர்.

இனித் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தம் திருச்சரிதையைக் கிளர்ந்தெடுத்தோதும் தமிழ்நூல்கள் முக்கியமாக மூன்றாகும். அவை சீர்காழிப்புராணம், திருவிளையாடற்புராணம், திருத்தொண்டர் புராணம் என்பன. இவை தம்முள் பிந்தியதனை இயற்றிய ஆசிரியரோ திருத்தொண்டர் சரிதையைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, அதனை மிக்க ஆர்வத்துடன் ஆறுக்கண்ணீர் சொரிந்து மற்றவர்க்கெடுத்துச் சொல்லித் திளைக்கும் இயல்பினர். அந்த வல்லாளரொருவர்க்குமே பிறரும் "தொண்டர்சீர் பரவுவார்" என்ற தனிப்பெரும் ஞானமுடியும் சூட்டியிருக்கிறார்கள். ஆகலின், அந்தத் திருத்தொண்டர்புராணத்திலுள்ள திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் வரலாறு படித்துத் தியானிப்பதற்கு மிகவும் ஏற்புடைத்தானதாகும். ஆகலின் அதனை, அந்தப் புராணத்திலிருந்தபடியே படித்துச் சிந்திப்பதனாற்றான் ஞானத்தெளிவாகிய பெரும்பயன் விளையும். அவ்வாறு திருத்தொண்டர்புராணத்தைக் கையில் எடுக்கவும், படிக்கவும், சிந்திக்கவும், தெளியவும் இடம் பொருள் வசதி வாயாத பெருங் குறையுடையார், பின்வரும் தியான சுலோகத்தையாயினும் படித்துத் தம் குறையை நீக்கி, திருஞானசம்பந்தப்பெருமானார்தம் திருவுருவத்தை மனத்திலிருத்தி, அவர்தம் திருவுருவத்தில் காணப்படும் திருவடையாளங்கள் அவர் செய்த அற்புதத் திருவருட் செயல்களைக் குறித்தவாறும் என்பதையும் மறவாது, அவர்தம் திருவடிப் பேற்றை அடையும் பெருவாழ்வின் பொருட்டு உழைப்பார்களாக,

தியான சுலோகம் பின்வருமாறு:—

ஶ்வேதம் தம் மணிகுண்டலம் யாமிஶிவம்
ஸௌம்யம் ப்ரஸந்நாநநம்
ஏகேஷ தஜ்ஜநநி ஸம்ஜ்ஞயா ஶிவபதம்
வாமே வயஃ பாத்ரகா।
நிவர்த்யஸ்தம் ஶிஶுஸம்பவோத்பஜ ஶ்ரீதவக்ஷம்
பாலஸ்ப்ருவிர்யபஸ்கம்
நாநா த்ரவ்யவிலஸத்கலிதம் பஜ மநஃ
ஶ்ரீஜ்ஞாநஸம்பந்தகம்॥

மநஃ - ஓ மனமே! மநஸ் என்ற நபும்ஸகலிங்கப் பெயர், விளிவேற்றுமையில் மநஃ என வரும். தமிழ்நூல்களிலும் வடமொழி நூல்களிலும் நெஞ்சறிவுறுத்தல், மனத்தை விளித்தல் முதலியன பரந்து வருதலை வாசகர் அறிவர். மனம் எங்களுக்கு ஒத்தாசையா யிராவிடின் பொதுவாக ஒரு கருமமும் கைகூடாது. சிறப்பாக அகத்திலே நிகழ வேண்டிய கருமங்கள் கைகூடா. அதனாற்றான் தெய்வநூல்கள் மனத்தை அடிக்கடி விளிப்பனவாயின. இவ்விடத்தில் திருஞான சம்பந்தப்பெருமானாரை மனத்திலிருத்தித் தியானிக்க விரும்பும் சாதகன், புறத்தே ஓடித்திரியும் மனத்தின் வேகத்தைக் குறைத்து ஒருநிலைப்படுத்தவேண்டி அதனை விளிக்கின்றான்.

பின்வரும் சொற்றொடர்கள் அனைத்தும் ஈற்றில் செயப்படு பொருள் வேற்றுமையில் வரும் ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகம் என்னும் சொல் லுக்கு அடைமொழிகளாதலின், அவை செயப்படுபொருள் வேற்று மைக்குரிய கம் விகுதி பெற்றுவருவதை வாசகர்கள் கவனிக்கக்கட வர். அன்றியும், அச் சொற்றொடர்கள் அந்த அந்தச் சிறப்பினையுடைய திருஞானசம்பந்தப்பெருமானாரையே குறிக்கின்றமையின், அவையெல் லாம் அன்மொழித்தொகைகளாய் நின்று விரியும்.

ஶ்வேதம் - வெண்ணிறம் பொருந்தியவரும். ஶ்வேத என்ற ஆண் பாற்பெயர் செயப்படுபொருள் வேற்றுமையில் ஶ்வேதம் என வரும். தியா னத்திலிருக்கும் சாதகன் தான் தியானிக்கும் மூர்த்தியின் நிறத்தை

முன்னதாக அறிய விரும்புவான். உலகியலிலும் ஒருவரைப்பற்றி விசாரிக்குங்கால் அவர் நிறம் யாது? என்ற கேள்வியே முன்னதாக எழுகின்றது. ஏனெனில், நிறத்தைப் பற்றுக்கோடாகக்கொண்டே மனமானது ஒரு பொருளைத் தாவிப் பிடிக்கின்றது.

𑌮𑌣𑌿𑌕𑍁𑌨𑍍𑌤𑌳𑌂 - நீலமணியின் ஒளியையும் நிறத்தையும் ஒத்திருக்கின்ற சுருண்டு வளைந்த மிருதுவான குஞ்சியையுடையவரும். மணிகுந்தளம் என்பது அதனையுடைய பெருமானுரைக் குறிக்கின்றதாய் ஈற்றில் வரும் ஸ்ரீஞானசம்பந்தகம் என்னும் சொல்லுக்கு அடைமொழியாய் வருதலின், அன்மொழித்தொகையாம். இவ்வாறே பிற இடங்களிலும் கண்டுகொள்க. சேக்கிழார்சுவாமிகளும் "கருமென் சுருட் குஞ்சி உடனலையச் செந்நின்று" எனத் திருஞானசம்பந்தப்பெருமானுர் தம் அருட்கோலத்தைப் பெரியபுராணத்தில் கூறியிருப்பதைக் காண்க.

𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌚𑍍𑌛𑌿𑌖𑌂 - முற்பக்கத்தில் விளங்கும் சிகையையுடையவரும். முன்னிலையைக் குறிக்கும் 𑌪𑍁𑌰𑌸𑍍 என்ற பெயர் ஏழாம் வேற்றுமையில் 𑌪𑍁𑌰𑌸𑌿 என வரும். சாதாரணமான ஒரு குழந்தையைப் பொறுத்தவரையில் அதன் முற்குடுமியே எல்லாரையும் முன்னதாகக் கவர்ந்து நிற்பதாகும். இந்தச் சிகையோ மற்றவர்களைக் கவர்ந்துநிற்பதுமல்லாமல் எத்தனையோ கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. அது திருஞானசம்பந்தப்பெருமானுர்தம் வைதீகநிலையையும் அதன் பெருமையையும் குறிக்கிறது. அரைகுறையான வைதீகர்கள் அரும் பாடுபட்டு அரைகுறையான சிகையையே தரிக்கிருர்கள். ஆனல், வேத நெறி தழைத்தோங்க அவதரித்த பெருமானுர் தரித்த சிகையே வேத நெறியின் உண்மைத்தன்மை முழுவதையும் புலப்படுத்தும் உண்மைச் சிகையாகும். வைதீகத்தின்பேரால் தரிக்கப்பட்ட பல கோடிக்கணக்கான சிகைகளுள் உண்மையான வைதீகம் பெற்ற உண்மையான சிகையாகலின் இது இங்கே விதந்தோதப்பட்டது.

𑌸𑍌𑌮𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌨𑌨𑌂 - அன்பையும் இன்பையும் மற்றவர்க்கு விளைத்துப் பேரொளி வீசுகின்ற முகத்தையுடையவரும். 𑌸𑍌𑌮𑍍𑌯𑌂 𑌸𑍋𑌮 என்ற ஆண்பாற்பெயரிலிருந்து வந்த பண்புப்பெயராகும். மற்றவர்களுக்கு அன்பைத் தந்து இன்பத்தை விளைக்கிற சந்திரனுடைய குணம் யாதொன்றில் காணப்படுகின்றதோ அது ஸௌம்யமானதாகும், அதனுற்முன் திருஞானசம்பந்தப்பெருமானுர் தம் திருமுகம் "யாண்டும் பேரொளி பரப்ப வந்த" திருமுகமாதலின் ஈண்டு ஸௌம்யமான பிரசன்னமான திருமுகமெனப்பட்டது.

வாமே பய: பாத்ரகம் - இடது காத்திலே ஞானப்பால் நிறைந்த பொற்கிண்ணமுடையவரும். திருஞானசம்பந்தப்பிள்ளையார் தந்தையாருடன் திருத்தோணிபுரத்திற்குச் சென்றதும், ஆண்டு வேதவிதி, நிதிமுறைச்சடங்கு செறியாளராகிய தந்தையார் திருக்குளத்திலே மூழ்கியதும், அதுகாலை பிள்ளையார் முன்னுணர்வு மூள, கண்மலர்கள் நீர் ததும்பத் திருத்தோணிச் சிகரத்தைப் பார்த்து அம்மே! அப்பா! என்று அழைத்தருளி அழுதருளியதும், அதற்கு எம் பெருமானும் எம் பெருமாட்டியும் விடையின்மேல் வந்தருளி ஞானப்பாலூட்டிக் கண்ணீர் துடைத்து, அண்ணலை அங்கு அழுகை தீர்த்ததும், அம்மையார் ஞானப்பால் நிறைந்த பொற்கிண்ணத்தைப் பிள்ளையார்க்கு அளித்ததும் ஆகிய இவை தம்மை வாசகர்கள் அறிந்திருப்பர். அம்மையார் அளித்த பொற்கிண்ணமே இங்கு திருஞானசம்பந்தப்பெருமானார்தம் இடது திருக்காத்தில் காணப்படுவதாகும்.

தக்ஷ தர்ஜனீ ஸஞ்ஜ்ஞயா ஶிவதர்ஶகம் - வலதுகைச் சுட்டுவிரலின் குறிப்பினாலே சிவபெருமானாரைத் தாமும் கண்டு பிறர்க்குக் காட்டுபவரும். தர்ஶகம் என்பது த்ருஶ் என்ற அடியாகப் பிறந்து இங்கே "கண்டு காண்பிப்பவர்" என்ற பொருள் பெற்று நிற்கிறது. திருஞானசம்பந்தப்பெருமானாருடைய தந்தையாராகிய சிவபாதவிருதயர் திருக்குளத்திலே மூழ்கி எழுந்து கரைக்கு வந்து, பிள்ளையின் திருவாயில் பாலிருக்கக் கண்டு, எச்சில் மயங்கிடப் பாலூட்டிச் சென்ற பாவிதான் யாரோ என்று அச்சமுற்று நடுநடுங்கி, இதனைப் பிள்ளையிடத்திருந்தே அறியவேண்டுமென்று பிள்ளையை அணுகிச் சிறுகோலோச்சிப் பயமுறுத்தி, உனக்குப் பாலூட்டினார் யாரென்னப், பிள்ளையும் ஆனந்தக் கண்டுளி பெய்து, உச்சியின்மேலெடுத்தருளிய ஒரு திருக்கைவிரலினாற் சுட்டி, எம்பெருமானையும் எம்பெருமாட்டியையும் தம் உடற்றந்தையார்க்குக் காட்டியருளி "எம்மையிது செய்தபிரா னிவனன்றே" என்று சொல்லிய வரலாற்றைப் பெரியபுராணத்தில் வாசித்து இன்புற்று மகிழ்க. இந்த அற்புதம்பொருந்திய திருவருட்கோலத்தைக் குறிக்கவே ஈண்டு தக்ஷ தர்ஜனீ ஸஞ்ஜ்ஞயா ஶிவதர்ஶகம் எனப்பட்டது.

திகம்பரம் - வஸ்திரம் தரித்திராதவரும். உமாதேவியார் திருமுலைப்பால் கறந்து ஊட்டியருள உண்டருளியஞான்று நின்ற பச்சிளங் குழவிக் கோலமே இங்கு எடுக்கப்பட்ட தியான ரூபமாகலின், வஸ்திரம் தரித்திராத அத்துணைக் குழந்தைப் பருவத்தினர் என்பது தோன்ற திகம்பரம் என்றார்.

அம்பு³ஜே ஸ்தி²தவந்தம் - தாமரைமலரிலே திருவடி வைத்திருப்பவரும். திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அன்பர்தம் நெஞ்சத்தாமரையிலே திருவடி மிதித்துநின்று அன்பர்க்கு அந்த இரகசியமான பேரின்பத்தை ஊட்டுகின்ற பெருங்கருணையாளராதலின் அவர் தாமரைமலரில் திருவடி வைத்திருக்கிறாரென்று இங்கு இவ்வாறு ஓதப்பட்டதென அறிக.

பௌ³த்³த⁴வித்⁴வம்ஸகம் – பௌத்தம், சமணம் முதலிய பொய்ச் சமய இருட்களை வேரோடு நீக்குபவரும். "பௌத்தம்" எனவே அதனோடு சமணமும் கூறப்பட்டதெனக் கொள்க. திருஞானசம்பந்தப் பிள்ளையார் தம் குழந்தைப் பருவத்துத் திருவிளையாடல் திருக்குறிப்புகள் அனைத்தும் அவர் பரசமயகோளரி யென்பதனையே குறிப்பனவாயிருந்தன. அன்றியும், மூன்றாண்டுதானும் நிரம்பாத பச்சிளங்குழந்தையாய் நின்று திருத்தோணிச்சிகரம் பார்த்து எம்பெருமானையும் எம்பெருமாட்டியையும் தம் உடற்றந்தையார்க்குக் கையினால் சுட்டிக் காட்டிய ஞான்றே, தாம் சமணம், புத்தம் முதலாய பொய்ச்சமயங்களைத் துவம்சம் செய்யவந்த பரசமயகோளரி என்பது தோன்றத் தாம் பாடிய முதல் தேவாரப்பதிகத்தின் 10-ம் பாட்டில் "புத்தரொடு பொறியில் சமணும் புறங்கூற நெறிநில்லா" எனத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளினார். அதனாற்றான் இங்கே தியானத்துக்கு எடுத்திருக்கும் திருத்தோணிச் சிகரம் பார்த்த அழகிய திருக்கோலத்தின் திருவுள்ளத்திருக்குறிப்பொன்று பௌத்த சமணசமய சங்காரமே என்பது தோன்ற பௌ³த்³த⁴வித்⁴வம்ஸகம் என்றார்.

நாநாஜ்ஞாவிவஶங்கவிம்–வேறு வேறு அறிவுநிலையிலுள்ள வேறு வேறு தமிழ்ப்புலவர்க்கு மேலானவரும். அறிவின் மேலெல்லையில் நிற்கின்ற கவியானவரும். சேக்கிழார்சுவாமிகளும் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் புலமையைக் கூறுகையில் "நாவாண்ட பலகலையும் நாமகளும் நலஞ் சிறக்க" என்று கூறியதைக் காண்க.

ஶிஶும் தம் ஶ்ரீஜ்ஞாநஸம்ப³ந்த⁴கம் - குழந்தைப்பருவத்தினருமாகிய அந்தத் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளை.

ப⁴ஜ – வணங்கித் தியானித்துத் திளைப்பாயாக.

ப⁴ஜ என்பது ப⁴ஜ் என்ற தாதுவிலிருந்து வந்த முன்னிலை ஏவல் வினைமுற்று. ப⁴ஜ் என்னும் தாது வடமொழியில் வணங்கல், தியானித்தல், திளைத்தல் என்னும் கருத்துக்களைக் கொள்ளும் வலிமையுடையதாதலின், கருத்தில் "வணங்கித் திளைப்பாயாக" என மேலே கூறப்பட்டது.

பொழிப்புரை:—ஓ மனமே! வெண்ணிறம் பொருந்தியவரும், நீல மணியின் ஒளியையும் நிறத்தையும் ஒத்திருக்கின்ற சுருண்ட மிருது வான குஞ்சியையுடையவரும், முற்பக்கத்திலே சிகையையுடையவரும், பேரொளி வீசுகின்ற முகத்தையுடையவரும், இடதுகரத்திலே பால் நிறைந்த பொற்கிண்ணமுடையவரும், வலதுகைச் சுட்டுவிரலினலே சிவபெருமானரைச் சுட்டிக்காட்டுபவரும், வஸ்திரம் தரித்திராத அத் தனைக் குழந்தைப்பருவத்தினரும், (நெஞ்சத்) தாமரைமலரின்மீது திருவடி மிதித்திருப்பவரும், பௌத்தம், சமணம் முதலிய பொய்ச் சமய இருட்களை ஓட்டும் திருக்குறிப்புடையவரும், தமிழ்ப்புலவர்க்கெல் லாம் தலைமை வகிப்பவருமாகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளை வணங்கித் தியானித்துத் திளைப்பாயாக.

உறவும் பொருளுமொண் போகமும் கல்வியும் கல்வியுற்ற
திறவும் திறவிப் பயனு மெனக்குச் சுழிந்தபுனற்
புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்பும் ததும்பும் வண்டின்
நறவும் பொழிலெழிற் காழியர் கோன்திரு நாமங்களே.

சுபம்.

---

## சைவசமயிகளுக்கு ஓர் விண்ணப்பம்

அன்புமிக்க பெரியீர்,

இந்நிலவுலகிற் பரவியுள்ள பல்வேறு மதங்களையும் தன்னகத்துட் கொண்டு, அவைகளுக்கு அதீதமாய்க் குன்றிலிட்ட தீபமே போன்று என்றும் நின்றொளிரும் சுத்தாத்வைத சித்தாந்த சைவசமயத்தினைப் பரப்பத் திருவுளங்கொண்டு சைவப்பிரசாரஞ் செய்ய முற்பட்டுத் தமிழ் நாட்டில் நாளிது விக்கிரம ஆண்டு ஆவணித்திங்கள் முதல் வெளிவந் துலவ முன்வந்துள்ள தஞ்சை ஜில்லா கொரடாச்சேரி சித்தாந்த நிலையவாசி பஞ்சாக்கரபுரம் ஸ்ரீலஸ்ரீ வாலையானந்தசுவாமிகள் என்கிற ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்தசுவாமிகளை அறியாதார் எவருமிலர் என்பது திண்ணம்.

ஆயகாலை, சைவநலங்கருதி உழைக்கும் அன்பர்கள் பலரும், சைவ சபைகள், தமிழ்க்கழகங்கள் முதலியவைகளும் சைவப்பெரியாராகிய அவர்களை வரவேற்றுச் சித்தாந்தசைவச்செந்நெறி சிறந்தோங்குமாறு சொற்பொழிவாதியன செய்வித்துத் தங்களின் சமயத்தொண்டினல் உலகை நல்வழிப்படுத்தும்படி பணிவுடன் வேண்டுகிறேன்.

"ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே".

இங்ஙனம்

திருநெல்லிக்காவல்: 21—7—1940.

சிவஞானமௌனகுரு உருத்திரமூர்த்திதேசிகர்
சித்தாந்த சைவப்பிரசாரகர்.

---

# "படித்தவன் பாட்டைக் கெடுத்தான்; எழுதியவன் எட்டைக் கெடுத்தான்"

பாட்டைப் பாட்டாகவே படித்தல் வேண்டும்; வசனத்தை வசன மாகவே வாசித்தல்வேண்டும்; எழுத்திலும் இப்படியே வைத்துக் கொள்ளவேண்டும்; இதுவே தொல்லாசிரியர் கொள்கையாகும். ஆனல், இப்பொழுது தென்னிந்தியாவிலே சிலர் செய்யுட்களைச் செய்யுள் வடி வத்திலேயே படிப்போர்க்கு விளங்கவைக்கவேண்டுமென்று விரும்பி, அச் செய்யுட்களின் எதுகைமோனைச் சிறப்புச் சிதையவும், இசை கெட வும் பதம் பிரித்துக் குறியீடுகளை இடையிடையே செறித்து நூல்களைப் பங்கப்படுத்தி அச்சிடத் தொடங்கித் தாமும் இடர்ப்பட்டுப் படிப்போரை யும் இடர்ப்படுத்துகின்றார்கள். இப்படிச் செய்யும் இந்தச் சிலர் யாரென் னில் ஆங்கிலமுறையில் தமிழ் மொழியை நிரம்பாவகையிற் கற்றவராம்; இவர்கள் சிறு நூல்களை மாத்திரமல்ல சிறந்த புராணேதிகாசங்களையும் இப்படிச் சிதைக்கத் தலைப்பட்டுக்கொண்டார்கள், இப்படிப்பட்டவர்கள் செந்தமிழ்மொழிக்குச் செய்யும் இடையூறு சிறிதல்ல. புராணங்களுட் சிறந்ததெனச் சொல்லப்படும் பெரியபுராணத்தையும் இப்படிச் சேதஞ் செய்து அச்சிட்டுவிட்டார்கள்.

வண்டோங்கு செங்கமல......
பண்டோய்ந்த சொற்றிருத்தாண்......
விண்டோய்ந்த புனற்கங்கை......
கண்டோங்கு களிசிறப்ப......

எனச் சேக்கிழார்நாயனர் எதுகை சிறக்கப் பாடியருளிய திருவிருத் தத்தை நவீனமுறையிற் பெரியபுராணத்தை அச்சிடத் தலைப்பட்ட ஒருவர்,

வண் டோங்கு......
பண் தோய்ந்த......
விண் தோய்ந்த......
கண் டோங்கு......

எனச் சொற்றொடரைப் பிரித்து எதுகையின் சந்தத்தைக் கெடுத்து அச்சிடுவித்துள்ளார். வேறொரு திருவிருத்தத்தில், சுண்ணமொடு—உண் ணிறை—வெண்முளை—புண்ணிய என அடிதோறும் இயைபுபட வரும் எதுகைகளில் இரண்டாமடியிலுள்ள உண்ணிறை என்பதை உள் நிறை எனப் பிரித்து அச்சிட்டிருக்கின்றார். இந்தவிதமான பிரிவினை பல பல அந்தப் பதிப்பிற் காணப்படுகின்றன. உண்ணிறை யென்பதை உள் நிறையென்று பிரித்தாலொழியக் கருத்து விளங்காதென்பது அவர் கொள்கை போலும்! உள்நிறை உண்ணிறை யெனப் புணருமென்பதை உணர்தற்குரிய கருவிநூலைப் படியாத மாணக்கனுக்குப் பெரியபுராணப் படிப்பு ஆவசியகமா? கல்வியறிவிற் குறைந்தவர்களும் படித்து விளங் கிப் பயனடைக என்றுதானே ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் போன்ற

அறிஞர்கள் பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கந்தபுராணம் முதலிய நூல்களைக் கத்தியரூபமாகவும் எழுதி வெளியிட்டுள்ளார்கள்; அப்படிச் செய்தலை விடுத்து இப்படிப் பாட்டைச் சிதைத்தல் முறையாகுமா? பாட்டை விளக்கத்தானே உரை செய்வது? இது மாத்திரமா? இவர்கள் இன்னும் எத்தனை விபரீதத்தைச் செய்கிறார்கள்!

'பொன்னார் இதழிமுடியார் பால் பெறுவேன்'

"என்னுருயிரும் எழில் மலரும் கூடப் பிணைக்கும் இவள் தன்னைப் பொன்னார் இதழி முடியார் பால் பெறுவேன்" என்று போய்ப் புக்கார்." (ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம் ௩௦-ம் திருவிருத்தத்திற் பின் இரண்டடிகள்; குறித்த பதிப்பிற் கண்டபடி சொற்கள் பிரித்து எழுதப் பட்டுள்ளன.) உபாத்தியாயர் மாணாக்கனைப் பார்த்து "பிள்ளாய்! கடைசியிலுள்ள வரிக்குக் கருத்துச் சொல்லு" என்று கேட்க, மாணாக்கன் "பொன்போன்ற நிறம் விளங்கும் கொன்றைப்பூவை யணிந்த முடியினையுடைய ஒற்றியூர்ப் பெருமானிடம் பாலைப் பெற்றுக் குடிப்பேன்" என்று சுந்தரமூர்த்திசுவாமிகள் சொல்லிக்கொண்டு கோயிலுக்குட் போனார். (என்று பதில் சொல்லுகிறான்.)

உபாத்தியாயர்: எட முட்டாள்! என்னடா உளறுகிறாய்! பரமசிவனிடத்திலே பால் எப்படிக் கிடைக்கும்! சுந்தரமூர்த்திநாயனார் பால் குடித்ததென்று எங்கேனுஞ் சொல்லப்பட்டிருக்கிறதா?

மாணாக்கன்: ஐயா, என்னைக் கோபிக்காதீர்கள், அடியாதீர்கள், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பெரியநாயகியம்மையாரிடம் பால் குடித்ததாக முந்தி நீங்களே படிப்பித்தீர்கள்; இப்பொழுது சிவபிரானிடத்திலே சுந்தரமூர்த்திநாயனார் பால் வாங்கிக் குடிப்பதற்காகப் போனாராக்குமென்று நினைத்துச் சொன்னேன்; எனக்கு எல்லாம் விளங்குமென்றால் நான் உங்களிடம் படிக்கவரக் காரணமில்லையே!

உபாத்தியாயர்: உன்னிலும் அதிக பிழையில்லை; இந்தப் புத்தகத்தை அச்சிட்டவர்களுடைய பிழைதான் இது; "முடியார்பாற் பெறுவேன்" என்பதற்குக் கருத்துச் சொல்லு பார்ப்போம்.

மாணாக்கன்: அப்படியானாற் சொல்லுவேன் ஐயா, முடியாரிடத்துப் பெறுவேன். இப்படிக் கேட்டால் முந்தியே சரியாகச் சொல்லியிருப்பேன். இதைவிட்டு, நீங்கள் "பால் பெறுவேன்" என்று கேட்டீர்கள்; நான் "பால் குடிப்பேன்"என்று கருத்துச் சொன்னேன். என்மேற் பிழையில்லை ஐயா. இப்படிச் சிறுவர் விபரீதமாகப் பொருள் கொள்ளத்தக்க பிரிவினைகள் இப்படியான பதிப்புக்களிற் சில உள்ளன. இவ்விஷயமாக இனிமேலுஞ் சில கூறுவேன். [இந்துசாதனம்.]

---

# ஆசார்யரின் அறியாமை

[சிவஸ்ரீ K. விருத்தகிரிக்குருக்கள் அவர்கள் எழுதியது.]

உலகின்கட் சிறப்புற்றோங்கும் அநேக க்ஷேத்திரங்களுள் மிகச் சிறப்புற்றதும், நடுநாட்டில் உள்ளதும், திருநாவுக்கரசரின் சூலைநோய் தீர்த்ததும், அஷ்டவீரட்டத்துள் ஒன்றான திரிபுரசம்ஹார க்ஷேத்திரமும், கடிலநதியையும் விருக்ஷம் கொன்றையையும் உடையதுமான அதன் பெருமை சொல்ல முடியாது. அப்படி மிகச் சிறந்த திருவதிகை க்ஷேத்திரத்தில் விக்கிரமஞு ஆனித்திங்கள் 10-ம் நாள் ஸ்ரீ பெரிய நாயகி சமேத ஸ்ரீ வீரஹட்டேசுவரசுவாமிக்கு அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் நடந்தது. அநுக்ஞை முதல் மஹாபிஷேகம் ஐம்பெருங் கடவுளரின் திருவுலாக்காக்ஷி வரையில் செவ்வனே நடைபெற்றது. இக் கும்பாபிஷேகத்திற்குத் திருவாவடுதுறை ஸ்ரீமத் வைத்தியநாதக் குருக்கள், ஷெயூர் ஸ்ரீமத் சுவாமிநாதக்குருக்கள், திருலோக்கி காசி நாதக்குருக்கள், வடலூர் உ. ப. பாலசுப்பிரமணிய சிவாசார்யர் இன்னும் அநேக ஆதிசைவ விற்பன்னர்கள் வந்து மிகச் சிறப்புற நடந்தது. ஸ்ரீலஸ்ரீ நமசிவாயத்தம்பிரான் ஆவுடையார்கோயில் டிரஸ்டி ஸ்தானீகம் அவர்கள் மேற்பார்வையில் நடந்தது குறிப்பிடத்தக்கது. அத்துடன் சைவசித்தாந்த உபந்நியாசங்கள் ஸ்ரீலஸ்ரீ ஞானியார்சுவாமிகள் தலைமையில் நடைபெற்றன. சாந்தரூபியும், பக்தர்களை இரக்ஷிக்கும் கருணாமூர்த்தியும், தீனதயாளுவுமான சாக்ஷாத் மகேசுவரரைப் பிரதிஷ்டா நிமித்தம் கலாகர்ஷணம் செய்து, யாகசாலைப்பூஜை, அக்கினிகாரியங்கள் பழுதுருவண்ணம் நடந்து, கடம் மூலஸ்தானத்திற்குப் போகும்போது அவ்வூர் ஸ்தலஞ்ஞராகிய ஒரு அர்ச்சகர் இன்னொருவர் தலையில் இருந்த பிரதான மூர்த்த கடத்தைத் தானே அபிஷேகம் செய்யவேண்டுமென்னும் நோக்கத்துடன் பிடுங்கி, பிரதான ஆசாரியர் இருந்துகொண்டிருக்கும்போது, கடத்தைப் பிராணப்பிரதிஷ்டை நடப்பதற்குள் அபிஷேகம் செய்ய எத்தனித்தார். சமீபத்தில் இருந்தவர்கள் ஷெ செய்கையைக் கண்டித்து, அபிஷேகம் செய்யவொட்டாமல் தடுத்து, பிறகு நியாசபூர்வமாக அபிஷேகம் நடக்கச்செய்தனர். ஆஸ்திகம் குறைந்து நாஸ்திகம் பரவும் இந்நாளில், இந்தச் செய்கை பக்தியைக் குறைத்துப் பழிப்பிற்கிடமாகின்றது. ஆகையால் ஆதிசைவர்களாகிய நம்மவர்கள் மிகுந்த ஊக்கத்துடன் ஆஸ்திகம் பரவச்செய்யுமாறும் இனி இச் செய்கைகள் நடத்தாமல் இருக்கும்படியும் சாக்ஷாத் ஸ்ரீ உமாசகாயனைப் பிரார்த்திக்கிறேன்.

---

# "சிவபரத்துவ நிச்சயம்"

தேவதேவன் மாதேவன் சிறப்புடை யீச னெங்கோன்
மூவரில் முதல்வ னேகன் முடிவிற்கு முடிவாய் நின்றோன்
ஆவியு ளாவி யானோ னந்தண னாதி யென்றே
எவரை யிசைத்த வம்மா எல்லையில் மறைக ளெல்லாம்.

என்று கச்சியப்பசிவாசாரியர் ஓர் திருவிருத்தத்திற் கூறும் சிவபரத்துவத்தை 215 பாசுரங்களால் விளக்குவது இந்நூல். வேதசிவாகமங்களில் இலைமறை காய்போல ஆங்காங்கே சிதறுண்டு கிடக்கும் உண்மைகளை ஒருங்கு சேர்த்து செவ்வனடியிற் செறித்தாங்கு விளக்குவது இந்நூல். இதனை இயற்றினார் சைவபரம்பரையில் வந்தவரும், திருவருட்பயன், கொடிக்கவி, போற்றிப்பஃறொடை, வினாவெண்பா, உண்மைநெறிவிளக்கம் முதலிய சித்தாந்தசாத்திரங்களுக்குப் புத்துரை கண்டவரும், தமிழ்ப்பண்டிதருமாகிய திருநெல்வேலிப் பேட்டை ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளையவர்களாவார். இவர் சோற்றூர்ச் சமஸ்தான கவிராயபரம்பரையினர். பழைய வைதிக சைவமாண்பினர். இவருக்கு உபகாரியாகப் பிரமாண சகிதமாக இந்நூற்கு உரையெழுதி முடித்து அச்சிட்டுதவியவர் காழி: பி. அகோரம் பிள்ளையவர்களாவார். இவர் நூலாசிரியருக்குப் பின்வாங்கக் கூடியவரல்லர் என்பதை உரையை உற்றுநோக்குவார்க்குத் தெற்றெனப் புலனாகும். இரு பேராசிரியர்களால் வெளியிடப்பட்ட இந்நூலை ஒவ்வொரு சைவாபிமானியும் வாங்கிப் படித்து இன்புறவேண்டியது பெருங் கடனாகும். எமக்கனுப்பிய பிரதிக்காக உரையாசிரியருக்கு வந்தனஞ்செலுத்துகின்றோம். பிரதி ஒன்றின் விலை அணா12. பிரதிகள் கீழ்க்கண்ட விலாசத்திற் பெறற்பாலன. பி. அகோரம்பிள்ளை, உபாத்தியாயர், போர்ட் பாடசாலை, ஸ்ரீபெரும்பூதூர், செங்கற்பட்டு ஜில்லா.

இங்ஙனம்

மயிலாப்பூர். சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை.

# 'வேதாந்தத் தெளிவு'
# வெளியீட்டு முன்னுரை

உடையா ளுன்ற னடுவிருக்கு முடையா ணடுவு நீயிருத்தி
யடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானு லடியேனுன்
அடியார் நடுவு ளிருக்குமரு ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

உலகின்கண் ஆன்மாக்கள் உண்மை கடைப்பிடித்து உயர் நிலையடைதற்கு பல ஆசாரியர்களும் பல பெரியார்களும் ஒரோரு காலத்துந் தோன்றி உண்மைநூல்களை உதவியுள் ளார்கள். உண்மை நூல்கள் பல நிரப்பியிருந்தும் அது தெரிந்து நன்னெறியடைவோர் சிலரே. அதில் மிக உயர்ந்த கல்விகற்றும், வேதாந்தம் என்ற அளவில் சென்றதுமே, மேற் செல்லாது தயங்கித் தர்க்கித்துத் தகுதியுள்ளவை காண்பார் மிகச் சிலரே.

இம்மயக்கத்தைத் தெளிவுபடுத்தி வேதாந்தத் தெளிவு என்ற சைவநூலை நம் சைவமக்களிடையே பரப்பி, சைவமெய்ப் பொருளாம் சிவபரஞ்சுடரின் திருவருளைப்பெற்ற பெரியார், காரைக்குடி. திரு. ராம சொக்கலிங்கச்செட்டியா ரவர்களாகும்.

இவர்கள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களின் வழிமுறை பாடங்கேட்டவர், நாவலரவர்களிடமே திருவாசகபூசை பெற்ற வர், ஸ்ரீ வன்றொண்டரவர்கள் மாணவர் சிவதீக்ஷைபெற்றுக் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கிப் பூசை புரியும் பேர் பெற்ற வர், சிதம்பரத்தில் மெய்கண்ட வித்தியாசாலை தாபித்து சைவ சித்தாந்த சாஸ்திரபாடங் கற்பித்துப் பயன்பெற்றவர், சைவ சமயத்தொண்டு சிறந்த தொண்டெனக்கொண்டு சுமார் ஒரு நூறு நூல்கள் வரை இயற்றியுள்ளார்கள். அவ்வளவும் சிவபரத் துவமன்றி மற்றொன்று மறந்துங்கூறு வாய்மையுடைத்து.

இன்னவகைச் சிறப்பு நலங்கள் பெற்ற பெரியோர்களால் உண்மைக்குறுதியாக ஆக்கப்பெற்ற நூல்கள் நமது சைவசாஸ் திரபரிபாலனத்தில் வெளியிடுவதுதான் சைவசாஸ்திரபரிபாலன மெனக் கருதி, திரு. செட்டியாரவர்கள் புதல்வர், திரு. ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியாரவர்களின் அனுமதி பெற்றுள் ளேன்.

ஆதலால் நமது சைவசாஸ்திரபரிபாலன மாதவெளியீட் டில் பிரசுரித்தால் வேதாந்தத் தேளிவு, சிவஞானபோதார்த்த லேகுவசனம் என்ற (145 பக்கம், 155 பக்கம் உள்ள) இப்புத்த கம் கிடைக்கப்பெறாத ஏனையோர் பலரும் இலகுவில் தெரிந்து கொள்ளப் பெறுவார்கள் என்பது கருதி இதில் வெளியிடத் திருவருளைத் துணையாக்கொண்டு முன்வந்துள்ளேன்.

திரு. செட்டியாரவர்கள் முகவுரையாதியாக மாதந்தோறும் எழுதிவருவேன். அன்பர்கள் யாவரும் சைவசாஸ்திரபரிபாலனம் வளர்ச்சியடையச்செய்து, "மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்" என்ற உண்மையை உறுதியாக்க உமைபொருபாகனை வழுத்துகின்றேன். நலம்.

M. R. நாகேஸ்வரக்குருக்கள், ஸ்ரீதண்டபாணிஅர்ச்சகர்,
மருதமலை தேவஸ்தானம், வடவழி—கோவைஜில்லா.

---

## வச்சிர-சத்தி விசார அங்கீகாரம்

[கொழும்பு, சிவன்கோவில்
சிவஸ்ரீ ச. இரகுநாதக்குருக்கள் அவர்கள் எழுதியது.]

கண்டனூர் சிவஸ்ரீ அரு. இராமநாதக்குருக்கள் அவர்கள் எழுதிய வச்சிர-சக்தி விசாரம் என்னும் முகநாமங்கொண்ட விஷயத்தைப் பார்த்து மகிழ்ச்சியுற்றோம். அவர்கள் எழுதியதை அங்கீகரித்து எனது அபிப்பிராயத்தையும் எழுதுகின்றேன்.

குமாரதந்திரம் சத்தி அஸ்திர ஸ்தாபனவிதிப் படலத்திலே,

𑌪𑌤𑍍𑌰𑌾𑌯𑌾𑌮𑌂 𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌪𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌯𑍇𑌤𑍍।

[பத்திரத்தின் நீளத்தை மூன்றாகப் பகிர்ந்து மூன்று பத்திரங்கள் செய்யவேண்டும்.]

𑌉𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌰𑌿 𑌪𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌋𑌜𑍁𑌕𑌾𑌰𑌾𑌣𑌿 𑌕𑌲𑍍𑌪𑌯𑍇𑌤𑍍।

[ஒன்றின்மேலொன்றாக நேராகச் செய்யவேண்டும்] என்று செப்பப்பட்டது. இதை அறுமுகவேலென்று அறிஞர் கூறுவர்.

கந்தபுராணம் சூரபன்மன் வதைப் படலத்தில் "இருதலை படைத்த ஞாங்கர்" என்றது வலம் இடம் என்ற இருபக்கங்களிலும் மூன்று முனைகள் (எனவே, ஆறு முனைகள் இருபக்கங்களிலும்) பொருந்திய வேல் என்றுணர்க. இதுபோலவே ஸ்காந்தம், தணிகைப்புராணம், சிற்பம் முதலிய நூல்களிலும் சொல்லப்பட்டதாகும். வச்சிர-சக்தி என்ற பதம் துவந்துவ சமாசமாகும். ஆனதன்மையினாலும் வச்சிரம் வேறு சத்தி வேறு என்று உணரப்படும்.

கந்தபுராணம் சயந்தன் கனவுகாண் படலத்தில் நான்காம் செய்யுளில்,

வீறுகேதனம் வச்சிர மங்குசம் விசிக
மாறிலாதவே லபயமே வலமிடம் வாத
மேறுபங்கய மணிமழுத் தண்டுவில் லிசைந்த
வாறிரண்டுகை யறுமுகன் கொண்டுவே ளடைந்தான்.

என்று சொல்லப்பட்டமையாலும் வச்சிரமென்று சொல்லப்படும் குலிசாயுதம் வேறானதாகும். சத்தியென்றது வேற்படையை. பேரறிவாளர் இவ்வாறு உணர்வர்.

---